உ

திருச்சிற்றம்பலம்.

# திருவையாற்றுத் திருக்கோயில் வரலாறு.












தருமபுரம் ஆதீன வெளியீடு. **43.**

1941.

உ

திருச்சிற்றம்பலம்.

# திருவையாற்றுத் திருக்கோயில் வரலாறு.

இஃது

இவ்வாலய பரம்பரைத்தருமகர்த்தா

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுரம் ஆதீனம்,

24-வது மகா சந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ ஷண்முகதேசிக ஞானசம்பந்த

பரமாசாரிய சுவாமிகள் திருவுளத்தின்படி

அச்சிடப்பெற்றது.

1941.

# பொருளடக்கம்.



திருவையாற்றுத் திருக்கோயில் "சூர்ய புஷ்கரணி தீர்த்தம்".



திருக்கயிலாய பரம்பரைத் திருத் தருமபுர ஆதீனம்

உச-வது மகா சந்நிதானம்

ஸ்ரீ சண்முக தேசிக பரமாசார்ய சுவாமிகள்

சிவமயம்.

# திருவையாற்றுத் திருக்கோயில் வரலாறு.



## 1 தலமும் பெயர்களும்.

1. தலம்:- கடலாற் சூழப்பட்ட இந்நிலவுலகின் கண் "சோழவளநாடு சோறுடைத்து" என்றும், "மண்ணுவது சோழமண்டலமே," என்றும் சிறப்பித்து புலவர்களால் புகழப்பட்ட சோழநாட்டின்கண் பாடல் பெற்ற நூற்றுத் தொண்ணூறு சிவத்தலங்களிருக்கின்றன. அவற்றுள் இத் தலம் காவிரியாற்றின் வடகரையிலுள்ளது.

2. இத்தலம் ஐயாறு, பஞ்சநதம், செப்பியேச்சுரம், பூலோககைலாசம், உலோகமாதேவீச்சுரம், காவிரிக் கோட்டம் என்னும் பல பெயர்களையுடையது. வடமொழியில் பஞ்சநதம் என வழங்கும். ஆங்கிலத்தில் திருவாதி (Tiruvadi) என்று மாறி நடைமுறையில் அப் பெயரால் அழைக்கப்படுகிறது. தஞ்சாவூர் ஸ்டேஷனிலிருந்து வடக்கே 7-மைல் தூரத்திலுள்ளது.

இறைவனும் செம்பொற்சோதியார் நந்தியம்பெருமானின் எற்புடம்பு நலம்பெற கங்கைநீர், மேகநீர், பிரமன் கமண்டலநீர், அம்மை கொங்கையின்பால், நந்தியின் வாய் நுரைநீர், என்னும் ஐந்து நீரினாலும் அபிடேகஞ் செய்தார். அந்த ஐந்து நீரும் ஐந்து ஆறுகளாக பரந்து சென்று காவிரியில் கலந்தது. அதனால் இதற்கு **ஐயாறு** (வடமொழியில் பஞ்சநதம்) என்றும்,

ஐயாறப்பரின் அரும் பெரும் திருநாமம் ஆம் பஞ்சாக்கரத்தை செபித்தோர் சித்திமுத்திகளைப் பெறுவதால் இத் தலத்திற்கு **சேப்பியேச்சுரம்** என்றும்,

தமிழும் சைவமும் மிளிர திருத்தொண்டியற்றிய திருநாவுக்கரசு சுவாமிகட்கு கைலைக்காட்சியருளிய காரணத்தால் **பூலோக கைலாசம்** என்றும்,

தஞ்சைப் பெரிய கோவில் கட்டுவித்த முதல் இராசராச சோழனது மூத்ததேவியாராகிய உலோகமாதேவியார் தம் பெயரால் திருக்கோயில் கட்டி அதில் பரமனை எழுந்தருளச் செய்து பூசனையாற்றுமாறு செய்தமையால் **உலோக மாதேவீச்சுரம்** என்றும்,

காவிரியால் பூசிக்கப்பட்டமையால் **காவிரிக்கோட்டம்** என்றும் ("காவிரிக்கோட்டத்தை யாறுடையடிகளோ" என்பது ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் வாக்கு. காமக்கோட்டம், குமரக்கோட்டம் என்பதுபோல காவிரிக்கோட்டம்) பெயர்கள் வழங்கப்படுகின்றன.

## 2 மூர்த்தி.

இத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் மூர்த்திகளின் பெயர்களாவன:—

ஐயாறப்பர், செம்பொற்சோதியார், செப்பேசர், ஆட்கொண்டேசர், பிரணதார்த்திஹரர், என்னும் பல திருநாமங்கள் சுவாமிக்கு வழங்கப்படுகின்றன.

அறம்வளர்த்த நாயகி, திரிபுரசுந்தரி, தருமாம்பிகை முதலிய பெயர்கள் அம்மையின் பெயர்கள் ஆகும்.

விநாயகர் — ஓலமிட்ட விநாயகர், ஆதிவிநாயகர், என்னும் பெயர்களை உடையது.

இத்தலத்தில் முருகப்பெருமான் வில், வேள் தரித்து காட்சியளிக்கிறார். அதனால் தனுசு சுப்பிரமணியன் எனத் திருநாமம் பெற்று விளங்குகிறார்.

காசி விஸ்வேசர், சுரகரேசர், வீறூஊறுதல் சிவலிங்க மூர்த்தங்கள், மழுபாடி மன்னும் மணாளன், பஞ்சபூத சிவலிங்கங்கள் ஆட்கொண்டார் முதலான மூர்த்தங்களும் உண்டு.

## 3 தீர்த்தங்கள்.

இத்தலத்திற்குரிய தீர்த்தங்கள்:— காவிரியாறு, சூர்ய புஷ்கரணி, சமுத்திர தீர்த்தம், அயனரி தீர்த்தம் என்பன. காவிரியாறும், சூர்யபுஷ்கரணியும் மிகச்சிறப் புடையன. காவிரியில் இத்தலத்தில் ஸ்நானம் செய்வோர் அடையும் பலனை மற்றைத் தலங்களில் துலாமாதம் முழுதும் ஸ்நானம் செய்தாலும் அடையமுடியாது. பூச மண்டபத்துறை என்னும் பெயருடன் படித்துறையோடு கூடிய ஒரு அழகிய மண்டபம் காவிரிக்கரையில் அமைந்து உள்ளது. காவிரியில் இங்குதான் சுவாமி தீர்த்தங் கொடுத் தருளுவது. சூர்யபுஷ்கரணியில் ஸ்நானம் செய்தோர் பஞ்சமா பாதகங்கள், ஸ்திரீ ஹத்தி, கோஹத்தி, பிரமஹத்தி, முதலிய தோஷங்கள் எல்லாம் நீங்கப்பெறுவர்.

## 4 தலப்பெருமை.

நந்தியம்பெருமான் தவஞ்செய்து சிவகணத்தலைமை யும் முதற் குருவாம் தன்மையும் பெற்ற சிறப்பினை உடையது. திருநாவுக்கரசு சுவாமிகளுக்கு கயிலைக் காக்ஷியும் ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு ஆறுவிலகி வழிவிட்டதும், சுரதமகாராஜனுக்கு மகப்பேறளித்ததும், ஓர் பார்ப்பனச் சிறுவராகிய பக்தர்க்கு இயமன் வந்த காலத்து க்ஷேத்திரபாலகர் வடிவாய்ச் சென்று இயமனை வதைத்து முத்தியருளியதும் ஆகிய பல பெருமைகளை உடையது.

## 5 ஆலய அமைப்பு.

இத்தலத்தில் செம்பொற்சோதியார் ஆம் சிவ பெருமானுக்கும் அறம்வளர்த்தநாயகி ஆம் அம்மை யாருக்கும் தனித்தனி ஆலயம் உண்டு. இரண்டும் கிழக்கு நோக்கிய சந்நதிகளே. சுவாமி ஆலயத்தில் கிழக்கு, மேற்கு, தெற்கு மூன்று திக்குக்கும் தனித்தனிக் கோபுரங்கள் உண்டு. வெளிப்பிரகாரத்தில் சூரியபுஷ்கரணி தீர்த்தமும், தெற்கும் வடக்கும் ஆம் இருபக்கத்திலும் தென் கயிலாயம், வடகயிலாயம் என்னும் இரண்டு சிறிய ஆலயங் களும் இருக்கின்றன. மூன்றும் பிரகாரத்தில் உத்ஸவ மண்டபம், பிரசங்க மண்டபம், யாகசாலை முதலியன இருக்கின்றன. இப்பிரகாரத்தில் கிழக்கும் தெற்கும் இரண்டு வாயில்கள் இருக்கின்றன. தெற்கு வாயிலால்தான் சுவாமி நான்காம் பிரகாரத்திற்கு வருகின்றார். ஸ்ரீகயிலாசத் தில் தெற்குவாயிலால் இறைவன் வருவது ஆதலின் பூலோக கைலாசமாகிய இத்தலத்தும் அவ்விதமே வருகின்றார். முதல் பிரகாரத்தில் தக்ஷிணாமூர்த்தி சந்நதி மிகச்சிறப்புடையது. சிவபெருமானின் சடை கர்ப்பக்கிரஹத்தின் பின்புறம் பிர காரம்வரையில் வளர்ந்திருப்பதாகவும், அங்கு பல முனிபுங்க வர்கள் இன்னும் தவஞ்செய்கின்றார்கள் என்றும் ஐதீக மாதலால் அவ்வழியாகப்போவதில்லை. இதை அடுத்தவெளிப் பிரகாரத்தில் திருத்தொண்டர் திருவுருவங்களும், விநாயகர், முருகர், சோமாஸ்கந்தர், தென்முகக்கடவுள், கூத்தப் பிரான் முதலிய திருவுருவங்களும் இருக்கின்றன. சோமாஸ் கந்தருக்கு தனி ஆலயம் உண்டு. இப்பிரகாரத்தின் சுவரின் கண் முற்காலத்தே எழுதிய அழகிய சித்திரங்கள் காணப் படுகின்றன.

இவ்வாலயத்தை முதற்றிருப்பணி செய்தவர் சூர்ய வம்ச சக்கிரவர்த்தி பிரியவிருதன் என்பார். இவர் தலயாத் திரை வந்தபோது ஐயாறப்பர், "அரசனே! திருவையாறு அடைந்து நமதாலயத்தை திருப்பணி செய்து மகா கும்பாபிஷேகம் செய்து வைப்பாயாக!" என அசரீரியால் உணர்த்த, திருப்பணிசெய்து கும்பாபிஷேகம் செய்வித்தார். இரண்டாம் திருப்பணியாளர் சோழர்களுள்ளே மிகச் சிறப்புற்றோங்கி, புலிக்கொடியை இமயத்தில் நாட்டிய கரிகால் பெருவளத்தான் என்னும் சோழவரசன், இத்தலத் தைத்தரிசிக்க வந்தபோது இரதம் பூமியில் அழுந்திவிட அவ்விடம் தோண்டிப்பார்த்தபோது சிவலிங்கம், அம்பிகை, விநாயகர், சுப்பிரமணியர், சப்தமாதர், சண்டேசர், ஆதித்தன் முதலிய கடவுளர்களும் நியமேசர் என்னும் முனிபுங்கவரும் இருக்கக்கண்டு, முனிவரை வணங்க, முனிவர் யாரையும் வெல்லும் தண்டமொன்று கொடுத்து இவ்வாலயத்தைத் திருப்பணி செய்யுமாறு உத்திரவிட நந்தியின் குளம்படியில் பொன், வெல்லம், கருங்கல், மூன்றும் எடுத்து திருப்பணி செய்து கும்பாபிடேகம் செய்வித்துப் பூசைக்கு வேண்டிய நிபந்தங்கள் ஏற்படுத்தினர். மூன்றுவதாக திருப்பணி செய் தவர் தஞ்சையை ஆண்ட நாயக்கர் குலத்து வந்த அச்சுத தேவப்ப நாயக்கர் என்ற மன்னரின் அமைச்சரும், அந்த ணர் குலத்துதித்தவருமான கோவிந்த தீக்ஷிதர். இப்பால் தேவகோட்டை நகர தனவைசியர், ஸ்ரீமான் உ. ராம. மெ. சுப.சேவு. சேவுகஞ்செட்டியார் குமாரர் மெய்யப்பசெட்டி யார் அவர்கள் அறம் வளர்த்த நாயகியார் ஆலயத்தை புதிய கருங்கற் பணிசெய்து கும்பாபிஷேகஞ் செய்வித் தார். அம்பாள் கர்ப்பக்கிரகத்தை கறுப்புச்சலவை கல்லால் மிக்க அழகுறத் திருப்பணி செய்துள்ளார்கள்.

## 6 முத்தி பெற்றோர்.

திருமால், பிரமன், இந்திரன், சூரியன், முதலிய தேவர்களும் அகத்தியர், ததீசி, விரசன், கவுதமகாசிபர், அங்கிரர், குறசர், அத்திரி, பிருகு, வசிஷ்டர், சதானந்தர், சிலாதர் முதலிய முனிவர்களும், சிவதாசன், துஷ்பிரவர்த்தி, துஷ்பிரக்ஞன், சிவப்பிரியன், சுரதன், தருமநாசன், நாதசன்மா, வாலியார், சுசரிதன், கரிகாலன் முதலிய பெரியோர்களும் பூசித்துப் பேறு பெற்றனர்.

## 7 பாடல்கள்.

ஸ்ரீ திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள், ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமிகள், ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள், ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகள், ஸ்ரீ அருணகிரிநாதர், ஸ்ரீபட்டினத்தடிகள், ஐயடிகள் காடவர்கோன் முதலிய பெரியோர்களால் பாடப்பெற்றுள்ளது.

1. **திருஞானசம்பந்த சுவாமிகள்:-** திருப்பழனம் என்னும் தலத்தை தரிசித்துவிட்டு திருவையாற்றுக்கு எழுந்தருளினர்கள். "அஞ்சேல் என்று அருள் செய்வான் அமருங்கோயில்" புகுந்து ஆனந்த பரவசராய்த் தரிசித்துப் பதிகம்பாடி, சிலநாள் தங்கிப் பல தலங்களையும் தரிசிக்க விரும்பித் திருமழபாடி என்னும் தலத்திற்கு எழுந்தருளினர். திருவையாற்றுக்குத் திருஞானசம்பந்த சுவாமிகள் பாடிய பதிகம் ஐந்து.

2. **திருநாவுக்கரசு சுவாமிகள்:-** திருக்காளத்தியைத் தரிசித்த அப்பர் சுவாமிகள் திருக்கயிலாயத்தையும் தரிசித்தல் வேண்டும் என்று வடக்கு நோக்கிச்சென்று காசி முதலிய தலங்களை தரிசித்துக்கடந்து கால்களால் நடந்தும்

கைகளால் ஊன்றி நகர்ந்தும், மார்பால் உந்திச்சென்றும், கால் கைகள் மார்பு தேய்ந்து அயர்ந்தார். இறைவன் ஓர் முனிவர் உருக்கொண்டு எழுந்தருளி நாவுக்கரசரை நோக்கி உறுப்புகள் அழிய இந்தப்பாலை நிலத்திற்கு வந்த காரணம் யாதென வினவ "இறைவன் கயிலையில் வீற்றிருக்கும் கோலத்தைத் தரிசிக்கும் விருப்பினால் அடைந்தேன்" என்றார். "மனிதர்கள் சென்று தரிசிக்கும் தன்மையதோ கயிலாயம். திரும்பிச் செல்வதே கடன்" என்றார். "மாறும் இவ்வுடல்கொண்டு இனித்திரும்பேன்" என்றார். திருநாவுக்கரசு சுவாமிகளது உறுதியை அறிந்து விண்ணிடை மறைந்து நின்று, "நாவுக்கரசரே! எழுந்திரும்" என்று திருவாய்மலர்ந் தருளியவுடன் சுவாமிகள் தீங்கு நீங்கிய யாக்கையுடன் எழுந்து அஞ்சலி செய்து தோத்தரித்தார். கயிலை நாயகர் "அன்பனே! இதோ காணப்படும் பொய்கையில் நீ மூழ்கி பழுதில் சீர் ஐயாற்றில் நமது கோலத்தைக் கண்டு வணங்குவாய்" என்று அசரீரியால் உணர்த்தினர். சுவாமிகள் அஞ்செழுத்தோதி பொய்கையில் மூழ்கி, திருவையாற்றில் நான்காம் பிரகாரத்தில் உள்ள சூரிய புஷ்கரணிதீர்த்தத்தில் எழுந்து ஆலயம் கயிலையாகத் தோன்ற தரிசித்தார். இவர் பாடிய பதிகம் பன்னிரண்டு.

3. **ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள்**:-திருக்கண்டியூரைத் தரிசித்துவிட்டு, சேரர்பெருமானுடன் ஐயாற்றைத் தரிசிக்க வரும் வழியில் காவிரியாறு பெருக்கெடுத்து இருகரையும் நிறைந்து ஓடங்களும் செல்லமுடியாத நிலைமையில் இருக்க, ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் "பரவும் பரிசொன்றறியேன்" என்னும் பதிகம்பாடி, காவிரிநீர் மேற்குப்பக்கத்தில், மலை போல்நிற்கவும் கீழ்பக்கத்தில் நீர்வடிந்து மணற் பரப்புத்

தோன்றவும் கண்டு அவ்வழியே சென்று ஐயாறப்பரைத் தரிசித்து மீண்டார். இவர் பாடிய பதிகம் ஒன்று. மூவரும் பாடிய அரும்பதிகங்கள் பதினெட்டு.

இவ்வாலயத்தின் தேவாரம், திருப்புகழ்ப் பாசுரங்களை புத்தகமாக அச்சிட்டு தகுதியுடையோருக்கு வழங்கி வரப் படுகிறது. இவ்வாலய சுதந்தர பீடமாகிய தருமபுர வாதீனத்தில் இத்தலத்திற்குரிய புராணத்தை அச்சியற்றி இனமாக வழங்கி வரப்படுகிறது. அச்சிட்டது அநேகமாக செலவாகிவிட்டது. தேவஸ்தானத்தில் அச்சிட்டு வெளியிட ஏற்பாடாகி யிருக்கிறது.

## 8 புராண வரலாறு.

1. திருநந்திதேவர் பேறுபெற்றது:- சிலாதமுனிவ ருக்கு நீண்ட நாள் புத்திரனிலாமையால் ஐயாறப்பனைப் பூசித்துத் தவஞ் செய்தனர். அத்தவத்திற்கு இரங்கி ஐயாறப்பன் "சிலாதனே! உனக்கு வேண்டிய வரம் யாது?" என்றார். முனிவர் சிறந்த புத்திரன் ஒருவனைத் தந்தருளல் வேண்டுமென பிரார்த்தித்தார்.

இறைவன் "சிலாதனே, நீ புத்திரகாமேட்டியாகஞ் செய்தல் வேண்டும். யாகம் செய்து முடித்து யாகபூமியை உழும்போது பெட்டகம் ஒன்று தோன்றும். அதில் அறிவிற் சிறந்த புத்திரன் ஒருவன் காணப்படுவான். அவனுக்கு வயது பதினாறுதான். அவனை எடுத்து வளர்த்துக்கொள்" என அநுக்கிரகித்தனர். சிலாதர் அங்ஙனமே யாகஞ்செய்து பூமியை உழப் பெட்டகம் கிடைத்தது. பெட்டகத்தைத் திறந்து பார்த்தார். பெட்டகத்துக்குள் நான்கு தோள்களும்,

மூன்று கண்களும் சந்திரனையணிந்த சடைமுடியும் கொண்ட மூர்த்தி தோன்ற முனிவர் மூர்த்தியை வலஞ் செய்து தோத்திரஞ் செய்ய ஐயாறப்பர் அசரீரியால் "சிலாதனே! பெட்டியை மூடித்திற" எனக் கட்டளையிட்டருளினர். கட்டளையின் வண்ணம் பெட்டகத்தை மூடித்திறந்ததும் முன்னர் காணப்பட்ட மூர்த்தி அழகிய குழந்தை உருவுடன் தோன்ற எடுத்து தன் மனைவி கையில் கொடுக்க அவளும் அதனை மார்போடணைத்து உச்சி மோந்து இன்புற்றாள்.



இக்குழந்தைக்கு "செப்பேசுவரன்" என்று நாமகரணஞ் செய்தார்கள். செப்பேசுவரர் பதினன்கு வயதிற்குள் வேதாகம சாத்திரங்களாகிய சகல கலைகளிலும் வல்லுனரானர். புத்திரனது அறிவின் திறத்தை அறிந்த தாய் தந்தையர்கள் அறிவின் மிக்க இம்மைந்தனை இன்னும் இரண்டு வருடத்தில் இழக்க நேருமே என் செய்வோம் என ஏங்கி அழுதனர். அதையறிந்த செப்பேசுவரர் தாய்தந்தையர் அழுதற்குரிய காரணத்தை அறிந்து அதை மாற்றிக்கொள்ள ஐயாறப்பனின் ஆலயத்தை யடைந்து பூசித்து அயனரி தீர்த்தத்தில் மூழ்கி காலின் மேல் காலையூன்றிக் கடுந்தவம் செய்தனர். செப்பேசுவரரின் அருமைத் திருமேனியை நீர்வாழும் பாம்பு முதலிய பிராணிகள் மாம்சத்தையும், எலும்புகளையும் அரித்துத் தின்றன. பன்னளாகியும் வெளிவராமையைக்கண்ட தாய்தந்தையரும் மற்றைத் தேவர் முனிவர்களும் அழுதனர். இவர்களின் அழுகைக்கு இரங்கி இறைவன் தோன்றச் செப்பேசுவரன் கண்டு களித்தான். இறைவன் வேண்டும் வரம் யாதென்று வினவ "என்றும் பதினறு வயதுடன் அழியாத சரீரத்துடன் வாழவும், மற்றும் அடியேன் வேண்டும் பதினறுபேறு

கனையும் கொடுத்தருள வேண்டும்" என்றார். இறைவன் "நீ கேட்டவண்ணம் பதினாறு வயதுடன் என்றும் அழியாது வாழ்வாயாக. பதினாறு பேறுகள் யாவை" என்றார் செப்பேசுரர்

1. "மறைக ணிந்தனை சைவநிந் தனைபொரு மனமும்
தறுகண் ஐம்புல னேதனக் கவல்செய் சதிரும்
பிறவி தீதெனப் பேதையர் தம்மொடு பிணக்கு
முறுதி நல்லறஞ் செய்பவர் தங்களோ டுறவும்.

2. மனமும் வாக்குநின் னன்பர்பா லொருப்படு மகிழ்வும்
கனவி லுஞ்சிவ னன்பருக் கடிமையாங் கருத்து
நினைவில் வேறொரு கடவுளை வழிபடா நெறியும்
புனித நற்சிவ கீர்த்தியே யுரைத்திடும் பொலிவும்.

3. யாது கேட்பினு மன்பருக் கீவதே யியல்பும்
மாத வத்தினே ரொறுக்கினும் வணங்கிடு மகிழ்வு
மோது நல்லுபதேச நல்லுறுதியு மன்பர்
தீது செய்யினுஞ் சிவலீலை யெனக்கொளுந் தெளிவும்.

4. தீமையாம் சமயங்க ளொழித்திடுந் திறமும்
ஏமுறும்பர மாதரைப் பரிசியா வியல்பும்
வாய்மையாகவே பிறர்தனம் விரும்பிடா வளமும்
தூய்மை நெஞ்சிற் பிறர்மனை நோக்குறாத் துறவும்.

5. துறக்கமீ துறையினு நரகிற் றேய்கினும்
இறக்கினும் பிறக்கினும் இன்பம் துய்க்கினும்
பிறைக்கொழுந் தணிசடைப் பெரும! இவ்வரம்
மறுத்திடா தெனக்குநீ வழங்கல் வேண்டுமால்." என்றார்.

வேண்டுவார் வேண்டுவதே ஈயும் இறைவன் அங்ஙனமே அருள்புரிந்தார்; செப்பேசர் நீரினின்று தவஞ்செய்தபோது நீர்வாழும் பிராணிகளால் அரித்த எற்புடம்பைக்கண்டு அவ்வுடம்பை நலமுறச்செய்தல் வேண்டுமெனக்கருதி கங்கை நீர், மேகநீர், பிரமன்கமண்டலநீர், அம்மையின் கொங்கை

யின்பால், நந்தியின் வாய்நுரைநீர் என்னும் ஐந்துநீரினாலும் அபிடேகஞ் செய்தார். இறைவன் திருக்கரத்தால் தொட்டு அபிடேகஞ் செய்த பேற்றால் செப்பேசர் உடம்பு ஊறு நீங்கி உதயகாலசூரியனைப்போல் பிரகாசித்தது. செப்பேசர் பெற்றபேற்றைக்கண்ட முனிவரும் தேவரும் இறைவனைப் போற்றி ஆனந்தமுற்றனர். சிலாத முனிவர் செப்பேசருக்கு நல்லதொரு திருமணத்தைச் செய்து கண்டுகளிக்க விரும்பி வசிஷ்ட முனிவருடைய பௌத்திரியும், வியாக்கிரபாத முனிவரது புத்திரியும், உபமந்யு முனிவரது தங்கையுமாகிய சுயம்பிரகாசை எனும் அம்மையைத் திருமழபாடி என்னும் தலத்தில் விதிப்படி திருமணஞ் செய்வித்தார். இத்திருமணம் பங்குனிமீ புனர்பூச நக்ஷத்திரத்தில் நடந்தது. பின் ஐயாற்றில் செம்பொற்சோதியரால் செப்பேசர் உபதேசிக்கப்பெற்று, கயிலையில் சிவகணங்களுக்குத் தலைவராம் பதவியையும் கயிலையில் முதற்றிருவாயிலில் இருந்து காக்கும் உரிமையையும் பெற்றார்.

2. **தன்னைத்தான் பூசித்த வரலாறு:—** ஐயாறப்பரை ஆகமவிதிப்படி பூசை செய்யும் ஆதிசைவர் ஒருவர் கங்கை நீராடக் காசிக்குச் சென்றனர். மற்றை இருபத்துமூன்று ஆதிசைவர்களும் அவருடைய காணி முதலிய உரிமைகளைக் கவர்ந்தனர். அவருடைய மனைவியாரும் மைந்தரும் வருந்தினர். ஐயாற்றப்பருடைய அடியிணையில் வீழ்ந்து வருந்தினர். அவர்களுடைய வருத்தத்தை நீக்குவான்வேண்டி இறைவன் விருத்தராய சிவவேதியர் உருக்கொண்டு அவ்வேதியர் மனை புகுந்து, மனைவியை உசாவி அறிந்து சூரிய தீர்த்தத்து ஸ்நானஞ் செய்து கோயிலில் இறைவனை நியமப்படி பூசித்து ஓர் மடத்துத்தங்கி இருந்தனர். இத்தருவாயிற் கங்கையாடச் சென்ற ஆதி

சைவர் அவ்விடம் வரப்பார்த்தவர் யாவரும் ஐயங் கொண்டனர். அந்தணர் வடிவந்தாங்கிய இறைவன் இவரைப் பார்த்து நீர் யார்? எங்கே வந்தீர் என்று வினவ அவ்வேதியர் யான் இச்சிவனை அருச்சிக்கும் அந்தணாளர் இருபத்துநால்வருள் ஒருவன் என்றார். அதற்கு சிவனார் 'யானே' என்றார். இருவரும் தத்தமக்குரிய ஆவணங்களைக் காட்டினர்; அவையின்கண் இருந்த பலரும் கையெழுத்தை ஒத்துப்பார்த்து அந்தணருடையதே மெய்ச்சாசனம் எனக் கண்டனர். ஆதிசைவர் குதூகலித்து நிற்க, சிவபெருமான் ஆகாயத்தில் உண்மைத் திருக்கோலத்துடன் இருந்து அந்தணரை ஆசீர்வதிக்க அனைவரும் பாடி, ஆடி இன்புற்றனர்.

3. **அகத்தியர் குறுமுனியானது:—** அகத்தியர் மிக்க மாதவர் கூட்டத்துடன் திருவையாற்றையடைந்து, சூரிய புஷ்கரணியில் மூழ்கி, திருக்கண்டியூர் முதலிய ஆறு தலங்களில் வசிக்கும் காசிபர் முதலிய முனிவர்களைக் கண்டு மீண்டும் ஐயாறு அடைந்து சூர்ய புஷ்கரணியில் ஸ்நானம் செய்து, நித்திய கர்மம் முடித்து, செம்பொற்சோதியாரை வணங்கித் தோத்திரஞ்செய்து காய்கனி சருகு முதலிய உணவும் நீக்கித் தவஞ்செய்தனர். அகத்தியர் செய்யும் அருந்தவமுணர்ந்த ஐயாறப்பர் இடபாரூடராய் காட்சி தந்தருளினார். காட்சியைக்கண்ட முனிவர் ஆனந்த மேலீட்டினால் ஆடினார்; பாடினார். இவற்றைக்கேட்ட இறைவன் "உனக்கு வேண்டும் வரம் யாது" என்றனர். அகத்தியர் "சுவாமி! அடியேன் உமது திருவடிகளுக்குக் கீழ் அடங்கி நின்று தோத்திரஞ்செய்ய ஒரு சிறிய வடிவந் தந்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்தனர். அவற்றிற்கு இரங்கிய இறைவன் அவ்வாறே குறள் வடிவத்தைக்

கொடுத்து "உன்பெயர் குறுமுனியாகுக" என்றும் அருள் புரிந்தனர். அன்று முதல் அகத்தியர் குறுமுனியாயினர். அகத்தியர் மீண்டும் இறைவனை நோக்கி "என் மனம் கயிலையைக்காண விழைகின்றது" என்று வேண்டினர். செம்பொற்சோதியார் "குறுமுனியே! நீ பஞ்சாக்கரமந்திர மோதிக்கொண்டு சூரிய புஷ்கரணியில் மூழ்கினால் கயிலையை அடைந்து நம்மைக் காண்பாய்" என்றனர். அகத்தியர் இறைவன் கூறியருளியவண்ணம் பஞ்சாக்கர மோதிக் கொண்டு தீர்த்தத்தில் மூழ்கினர்; கயிலையை அடைந்தனர்; இறைவனைக் கண்டனர்; ஆனந்த முற்றனர். அகத்திய முனிவர் திருவையாற்றில் தீர்த்தத்தில் மூழ்கி கயிலையை அ டை ந் த ன ர். திருநாவுக்கரசு சுவாமிகள் வடக்கே பொய்கையில் மூழ்கி ஐயாற்றை கயிலையாகக்கண்டு இன்புற்றனர்.

9. **மண்டபம்:**– முதற் பிரகாரத்தில் தக்ஷிணாமூர்த்தியின் எதிரில் முத்தி மண்டபம் என மண்டபம் ஒன்று உண்டு. இம் முத்தி மண்டபம் காசி, நாகப்பட்டினம், ஐயாறு என்னும் இம்மூன்று தலங்களிலேதான் உண்டு. இத்தகைய பெருமை வாய்ந்த முத்தி மண்டபம் வேறு எத்தலங்களிலு மில்லை.

10. **திருவிழாச் சிறப்பும் நித்திய பூசையும்:**–இத்தலத்தில் தினந்தோறும் ஆறுகால பூசைகள் நடைபெறுகின்றன. ஒவ்வொரு காலமும் அபிஷேக, அலங்கார சோடசோபசார தீபாராதனைகள் நடைபெறுகின்றன. தீர்த்த விசேஷமுள்ள ஸ்தலமாதலால்மாதப்பிறப்பு, அமாவாசை முதலிய புண்ணிய காலங்களில், சுவாமி புறப்பாடாகி தீர்த்தங்கொடுத்தருளும்.

பங்குனி மாதத்தில் **திருநந்திதேவர் திருமணம்** புனர்பூச நக்ஷத்திரத்தில் நடைபெறுகின்றது. சுயம்பிர காசையை மணஞ்செய்ய நந்தியம்பெருமானும், அறம்வளர்த்த நாயகியோடு ஐயாறப்பரும் திருமழபாடி என்னும் தலத்திற்கு எழுந்தருளி திருமணம் நடந்து இரவு ஐயாறு எழுந்தருளுதல் இத்தலத்திற்கே உரிய சிறப்புவிழா.

சித்திரை மாதத்தில் சித்திரை பிரம்மோத்சவம். இத்திருவிழா துவஜாரோகணம் முதல் 12நாள் நடைபெறுகின்றது. ஐந்தாம் திருவிழா மிகச்சிறப்புடையது. அன்றுதான் **தன்னைத்தான் பூசித்த ஐதீக உற்சவம்.** அன்று இரவு ஆறு ஊர் சுவாமிகளும் பல்லக்கில் எழுந்தருளுகின்றனர். ஆறு ஊர் சுவாமிகளுக்கும், சைவப் பெரியார்களுக்கும் மகேச்வர பூசை முறையே நடந்து பஞ்ச மூர்த்திகளும் வெள்ளிவாகனங்களிலும், ஆறு ஊர் சுவாமிகள் பல்லக்கிலும் வீதியுலாவரும் காட்சி எத்தலங்களிலுமில்லாது இத்தலத்திற்கு ஒரு சிறப்பு.

**ஏழூர் வலம் வருதல்:-** (சப்தஸ்தானம்) 1. திருவையாறு, 2. திருப்பழனம், 3. திருச்சோற்றுத்துறை, 4. திருவேதிகுடி, 5. திருக்கண்டியூர், 6. திருப்பூந்துருத்தி, 7. திருநெய்தானம், என்னும் ஏழுதலங்களையே சப்தஸ்தானம் என்பது. திருவையாற்றிலிருந்து திருவிழாவின் 12-ம் நாள் அதிகாலையில் சுயம்பிர காசையாம் அம்மையோடு நந்தியம்பெருமானும், அறம் வளர்த்தநாயகியோடு ஐயாறப்பரும், கண்டோர் கண்களைக் கவரும் காட்சியில் அலங்கரித்திருக்குங் கண்ணாடி பல்லக்குகளில் புறப்பட்டு முதலில் திருப்பழனம் சென்று அவ்வூர் மூர்த்தியோடு எழுந்தருளியிருந்து சோடச உபசார தீபா

ராதனை முதலியன நடந்து அங்கிருந்தும் புறப்பட்டு மற்றும் பல தலங்களுக்கும் சென்று, மறுநாட்காலையில் ஐயாற்றிற்கு எழுந்தருளுதல். இவ்விழாவைத் திருநந்திதேவரின் திருமண ஊர்வலம் எனக்கூறுகின்றூர்கள். இவ்விழா எத்தலங்களிலும் இல்லாத சிறப்புடையது.

4. வைகாசி மாதத்தில் வசந்தோற்சவமும், ஆடி அமாவாசையில் அப்பர் கயிலைக்காட்சி உத்ஸவமும், அறம் வளர்த்த நாயகியாருக்கு ஆடிப்பூர உற்சவமும், புரட்டாசி மாதத்தில் நவராத்திரி உற்சவமும், மார்கழித் திருவாதிரைத் திருநாளும், சிறப்பாக நடைபெறுகின்றன.

## 11. ஆறு தலங்களின் வரலாறு.

1. **திருப்பழனம்:-** இது ஏழூர் தலங்களில் ஒன்று. திருவையாற்றிலிருந்து கும்பகோணம் போகும் பாதையில் இரண்டு மைலில் இருக்கிறது. (இதற்கு வடக்கே ½மைலில் அப்பூதியடிகள் எழுந்தருளியிருந்த திங்களூர்இருக்கின்றது) இத்தலத்துத் தேவாரத்தில் திருநாவுக்கரசு சுவாமிகள் அப்பூதியடிகளைச் சிறப்பித்துப்பாடியிருக்கிறூர். சுவாமி பெயர் **ஆபத்சகாயர்**; அம்மை **பேரிய நாயகி.**

2. **திருச்சோற்றுத்துறை:-** இது கௌதம முனிவர் ஆச்ரமம். இந்திரன், சூரியன் முதலியோர் பூசித்துப் பஞ்ச காலத்தில் சிவபக்தர்களை வைத்து பூசித்தது. அருளாளர் என்றும் பிராமண பக்தருக்கு அக்ஷயபாத்திரம் அருளியது. இத்தலம் திருக்கண்டியூரினின்றும் கிழக்கே ஒன்றரை மைலில் உள்ள திருவேதிகுடியினின்றும் வடக்கே இரண்டு மைலிலுள்ளது. சுவாமிபெயர் **ஓதவைனேச்வரர்** அம்மை **அன்ன பூரணி.**

3. **திருவேதிக்குடி**:— இது வேதம் பூஜித்த தலங்களில் ஒன்று. விநாயகரும் வேதவிநாயகர் என வழங்கப்பெறுவர். திருக்கண்டியூரினின்று கிழக்கே $2\frac{1}{2}$-மைலில் உள்ளது. சுவாமி **வேதபுரீசுவரர்**, அம்மை **மங்கையர்க்கரசி**.

4. **திருக்கண்டியூர்**:— இது விரட்டத் தலங்கள் எட்டில் ஒன்று. பிரமன் சிரம் கொய்த தலம். திருஞான சம்பந்த சுவாமிகள் 6-ந் திருப்பாட்டிலும், திருநாவுக்கரசு சுவாமிகள் 3-ம் திருப்பாட்டிலும் ஓதியிருக்கின்றார்கள். சதாநந்தர் பூசித்து வழிப்பட்டது. இத்தலம் தஞ்சாவூரி லிருந்து திருவையாறு வரும் கற்சாலையில் 6-மைலில் உள்ளது. சுவாமி **வீரட்டநாதர்**, அம்மை **மங்கள நாயகி**.

5. **திருப்பூந்துருத்தி**:— இது இந்திரன், காசிபர், சோழன் முதலியோர் பூசித்தது. இங்கு திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளுக்கு தரிசனந்தர நந்தி விலகினதென்று கூறுப. திருநாவுக்கரசு சுவாமிகள் திருமடங்கட்டி எழுந்தருளியிருந்து வந்த தலம். பாண்டிநாடு சென்று வந்த திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுடைய பல்லக்கைத் திருநாவுக்கரசு சுவாமிகள் தாங்கியது இங்கேதான். இத் தலம் திருக்கண்டியூருக்கு மேற்கே இரண்டு மைலில் உள் ளது. சுவாமி **புஷ்பவனநாதர்** அம்மை**அழகார்ந்தநாயகி**.

6. **திருநெய்தானம்**:— இத்தலம் சரஸ்வதி பூசித்து வழிபட்டது. திருவையாற்றுக்கு மேற்கே ஒரு மைலில் உள்ளது. சுவாமி **நெய்யாடியப்பர்**, தேவியார் **வாலாம்பிகை**. இது இப்பொழுது தில்லைஸ்தானம் என வழங்கப் பெறுகின்றது. இங்குதான் சப்தஸ்தான உற்சவத்தில் ஐயாறப்பர் கடைசியாக எழுந்தருளி பின் ஐயாறு அடைவது.

12. **கல்வேட்டுகள்**:- கல்வெட்டுகள் நிறைய இருக்கின்றன. பெரும்பாகம் தமிழிலேயே இருக்கிறது. எபி-கிராபிகல் டிபார்ட்மெண்டில் இவைகளை நகல் செய்திருப்பதாகத் தெரிகிறது. காலஞ்சென்ற, P. V. ஜகதீசய்யர் என்பவரால் வெளியிடப்பட்ட South Indian Shrines என்னும் புத்தகத்தில் 428, 429, 430, 431, 432 பக்கங்களில் வெளிவந்திருக்கின்றன. இவ்வாலயத்திற்குப் பலரால் விளக்குகள், விளக்குமான்யம், திருவாபரணங்கள் முதலானவைகள் கொடுக்கப்பட்டிருப்பதாக கண்டிருக்கிறது. சரித்திர ஆராய்ச்சிக்கு முக்கியமாக இருப்பவைகளைப் பிரித்து எடுத்து அடுத்த பதிப்பில் சேர்க்க உத்தேசித்து ஆராய்ந்துவரப்படுகிறது.

13. **சொத்துக்கள்**:- நஞ்சையில் சுமார் 400-எக்கரும், புஞ்சை வகையருவில் சுமார் 300-எக்கரும் பூஸ்திதி உண்டு. கடைகளும், வீடுகளும் சில இருக்கின்றன.

14. **திருவாபரணங்கள்**:- ரூ. 40000/- மதிப்புள்ள திருவாபரணங்கள் இருக்கின்றன.

15. **வாகனங்கள்**:- வெள்ளியில் ரிஷபவாகனம் 2. பிரதோஷவாகனம் 1. மயில் வாகனம் 1. மூஷிகவாகனம் 1 கமல வாகனம் 1. மஞ்சத்துடன் 1. படிச்சட்டம் 1. இருக்கின்றன.

16. **வருமானம்**:- வருஷத்திற்கு, நிலம், கடை, கட்டிடங்கள், இதரவகை எல்லாமாக சுமார் ரூ. 20,000 வருமானம் வரும்.

17. **சிறப்பு நிகழ்ச்சிகள்**:— நாட்டுக்கோட்டை நகரத்தார் ஒருவரால் ஸ்ரீ அம்பாள் ஆலயம் பூராத்திருப்பணி செய்து 1937-ல் கும்பாபிஷேகம் சிறப்பாக நடைபெற்றது.

இன்னும் திருப்பணி நடந்து வருகிறது. தேவஸ்தானத்திய செலவிலும் பெருந் திருப்பணிகள் பல செய்யப்பட்டு வருகின்றன. புஷ்யமண்டபம் என்று பிரபலமாக விளங்கும் படித்துறை மண்டபம் புதுப்பிக்கப்படுகிறது. புதிதாக வாகனங்கள், திருவாபரணங்கள் ரூ.7000 பெறுமானத்தில் இப்பால் செய்யப்பட்டிருக்கிறது.



18. நிர்வாகம்:- தருமபுரம் ஆதீனத்தைச்சேர்ந்த ஆலயங்களில் இது ஒன்று. அவ்வாதீன நிர்வாகத்திலிருந்து வருகிறது.

## 19. தேவாரமும் தனிப்பாடல்களும்.

1. ஸ்ரீ திருஞானசம்பந்தர் தேவாரப்பதிகங்கள்
2. ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமிகள் ,,
3. ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் ,,
4. ஐயடிகள் காடவர்கோன் க்ஷேத்திர வெண்பா
5. ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் (திருவாசகம்)
6. பட்டினத்தடிகள் (புனலாற)
7. அருணகிரிநாதர் திருப்புகழ்

இவை எல்லாம் சேர்த்து ஒரு புத்தகமாக இவ்வாலயத்தில் வெளியிடப்பட்டிருக்கிறது.

## 20. தனி நூல்கள்.

1. திருவையாற்றுப் புராணம்.
2. பஞ்சநதி க்ஷேத்திர மகாத்மியம்.

---

